POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6 TN-MS C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the People

# புரட்சித்தலைவர் தலைமையில்

Regd. No. TN-MS (C) 422 Phone : 420212 4 பக்கம் விலை 50 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 9] சென்னை 24-9-1985 செவ்வாய் வெளியூா 25-9-1985 புதன் [ இதழ 331

# தமிழகம் எழுச்சிகோலம்

## கொட்டும் மழையில் உண்ணாவிரதம் துவக்கினார்

**சென்னை, செப், 24-ஈழத்தமிழர்கள் படுகொலை செய்யப்படுவதைக் கண்டித்தும் - ஈழத் தமிழர்களுக்கு நமது ஒருமைப்பாட்டு உணர்வைக் காட்டும் முறையிலும் முதல்வர்புரட்சித்தலைவர் கொட்டும் மழையில் உண்ணா விரதம் மேற்கொண்டார்.**

புரட்சித்தலைவர் அவர்களுடன் லட்சோப லட்சம் தொண்டர்களும் பொது மக்களும் உண்ணாவிரதம் மேற்கொண்டனா கடற்கரைச் சாலையான காமராஜர்சாலை மக்கள் கடலாக காட்சி அளிக்கிறது

சென்னை நகரில் காலை 5 மணிக்கே மழை கொட்டத்துவங்கியது. என்றாலும் காமராஜர் சாலையான கடற்கரைச் சாலையில் அண்ணா நினைவகம் அருகே அமைக்கப்பட்டிருந்த உண்ணாவிரதப் பந்தலுக்கு புரட்சித்தலைவர் தமது துணைவியாா ஜானகி அம்மையாருடன் காலை 5.55 மணிக்கு வந்து சேர்ந்தார். அப்போதும் மழை கொட்டிக் கொண்டிருந்தது.

கழகப் பொதுச் செயலாளர் இராகவானந்தம் அரசுத் தலைமைச் செயலாளா அந்தோணி ஆகியோர்புரட்சிததலைவரை வரவேற்றார்கள்.

மேடையில் மூன்று நாற்காலிகள் மட்டும் போடப்படடிருந்தன. இதனைப் பார்தத புரட்சித்தலைவர் அனைத்துத தலைவர்களுக்கும் நாற்காலிகள் போடும்படி கேட்டுக் கொண்டார், அதன் பின்னர் மேடையில் மளமள வென்று நாற்காலிகள் போடப்பட்டன.

### துவக்கம்

அதன்பின்னர் புரட்சித் தலைவா உண்ணா நோன்பு துவக்கினார், அவருடன் அவருடைய துணைவியார் ஜானகி அம்மையார், கழக அவைததலைவர் ஈ.வெ.அ.வள்ளிமுத்து பொதுச் செயலாளர் இர கவானந்தம், அமைச்சர்பண்ருட்டியார் தலைமை நிலையச் செயலாளர் கோ. செங்குட்டுவன் மாவட்டச செயலாளர் ஜேப்பியார், அமெரிக்க பாஸ்டன் நகர ஈழத்தமிழா இயக்கத்தலைவர் தில்லையம்பலம சுலோசனா சம்பத கோவைச்செழியன் ஆகியோா உண்ணா நோன்பு மேற் கொணடனர்.

மழை பெய்து கொணடே இருந்தது. பிரமமாண்டமான பந்தலில் அமர்ந்திருந்த மக்களும மழையைப்பொருட்படுத்தாது உண்ணா நோன்பு மேற்கொண்டனர்.

### முதல் மாலை

நாடாளுமன்ற துணை சபாநாயகா தம்பிததுரை புரடசித் தலைவருக்கும ஜானகி அம்மையாருக்கும் மாலைகள் அளித்து வாழ்த்துப் பெற்றார்.

### தோழமை கட்சிகள்

புரடசித் தலைவருடன் உழைப்பாளர் கட்சித

(4-ம் பக்கம் பார்க்க)

### அமிர்தலிங்கம நன்றி

இலங்கைத் தமிழருக்காக உண்ணாவிரதம இருக்கும் முதல்வா புரட்சிததலைவரை இலங்கைதமிழாதலைவர் அமிர்தலிங்கம இன்று காலை, சந்தித்து வாழ்த்தும் நன்றியும் கூறினார். 1983 ம் ஆண்டு இலங்கையில் நடைபெற்ற கலவரத்தில் உயிரிழந்த தொழிலதிபர் டென்சில் மொரைசின் துணைவியார் ஜெகதாவும், மகன் நிசானும முதல்வர் புரட்சித் தலைவரை சந்தித்து நன்றி தெரிவித்தனர்.

இலங்கைத் தமிழர் நிதிக்காக 2 ரூபாய் நோட்டு மாலை ஒன்றை முதல்வர் புரட்சித தலைவருக்கு ஒருவர் அணிவித்தார். இலங்கைத்தமிழர் நிதிக்காக முதல்வர்புரட்சித் தலைவரிடம் ஏராளமானோர் இன்று நிதி வழங்கினர்.



இலங்கை அகதிகளுக்கு உண்டியல் மூலம் நிதிவசூல் நடந்த போது முதல்வர் புரட்சித்தலைவர் நிதி அளித்தார்.

### 50 லட்சம்பேர் உண்ணா விரதம்

மதுரை, செப் 24—முதல்வா புரட்சித்தலைவர் கூட்டிய அனைத்துககட்சி கூட்டத்தில் எடுத்த முடிவை எற்று தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் மக்கள் உண்ணாவிரதம் இருந்தனர்.

பகல 1 மணி வரை கிடைத்த தகவல்படி 50 லட்சத்துக்குமேற்பட்டவர்கள உண்ணாவிரதம் இருந்தாாகள்,

மதுரையில் பாாவையற்றோா பள்ளி மாணவாகள் கிறிஸ்தவ பாதிரியார்கள, மறறும் அனைத்துக கட்சியினரு உண்ணாவிரதம இருந்தனர்.

மாபெரும் உண்ணாவிரத அறப்போா் நடத்தி தமிழகம புதிய வரலாறு படைத்துள்ளது,

# முழு அடைப்பு வெற்றி

## இலங்கைத்தமிழருக்காக தமிழகமே ஓரணியில் நின்றது

சென்னை, செப். 24—இலங்கைத் தமிழருக்குஆதரவாக இன்று தமிழகத்தில் நடைபெற்ற. பந்த்முழு வெற்றிபெற்றது. தமிழகம்ம ஓரணியில் நின்று இலங்கைத் தமிழருக்கான தனது ஆதரவைத் தெரிவித்தது.

### ஜனதா

இலங்கைத் தமிழருக்காக அனைத்துக் கட்சி சார்பில் நடைபெறும் உண்ணாவிரதப் போராட்டத்தில் ஜனதா கட்சியினர் ஈடுபட்டுள்ளனர். சென்னையில் பல்லவன் அலுவலகத்திற்குஎதிரே இருக்கும் காமராசர் சிலை அருகே ஜனதாக் கட்சி தொண்டாகள் உண்ணாவிரதமிருந்தனர்.

இந்த உண்ணா விரதப் போராட்டத்தில் இரா. செழியன், கலிவரதன், மன்னர்மன்னன், தமிழருவி மணியன். ஆறுமுகசாமி, கோவிந்தராஜ், முருகேசன், சரோஜா, ஆறுமுக நாயக்கர், உள்ளிட்ட ஆயிரக்கணக்கான தொண்டர்கள் பங்கேற்றனர்:

### இந்திராகாங்கிரஸ்

இந்திரா காங்கிரஸ் சார்பில் சென்னை காமராசர் சாலையிலுள்ள காந்தி சிலை அருகே இலங்கைத்தமிழருக்காக உண்ணாவிரதம் மேற்கொள்ளப்பட்டது.

இந்தஉண்ணாவிரதத்தில் மத்திய அமைச்சர் மரகதம் சந்திரசேகர், சிவாஜி கணேசன், மரகத அம்மையாரின் புதல்வி லதா, மாநிலங்களவை உறுப்பினர் தங்கபாலு. தமிழக இளைஞர் காங்கிரஸ் தலைவர் ஜெய்மோகன், சட்டமன்ற உறுப்பினர் டாக்டர் சவுரிராஜன் மேலவை உறுப்பினர் ஏ ஜெ தாஸ், திண்டிவனம் ராமமூர்த்தி, எஸ் கே டி ராமச்சநதிரன் எதிர் கட்சி துணைத் தலைவர் யசோதா, நடிகை தேவிகா அனந்த நாயகி, ஜி. லட்சுமணன், எஸ். எம். கிருஷ்ணன், இனியன் சம்பத், ஏ.கே. சண்முகசுந்தரம், மணிவர்மா, சேத்துப்பட்டு பாண்டியன் உள்ளிட்ட ஆயிரக்கணக்கான காங்கிரஸ் தொண்டர்கள் பங்கேற்றனர். உண்ணாவிரதம் இருக்கும் காங்கிரஸ் தொண்டர்களுக்கு உண்ணாவிரதமுடிவில் சேத்துப்பட்டு பாண்டியன் மோரும் வழங்குகிறார்.

### இந்திய கம்யூனிஸ்ட்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் மயிலாப்பூர் லஸ் முனையில் உண்ணாவிரதப் போராட்டம் நடைபெறுகிறது.

இந்த உண்ணா விரதத்தில் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் அழகிரிசாமி, மற்றும் ஜெகன், பர்மளா ஜெகன் உள்ளிட்ட ஏராளமான இந்திய கம்யூனிஸ்ட் தொண்டர்கள் ஈடுபட்டனர்.

### மார்க்சிஸ்ட்

மார்க்சிஸ்ட் கட்சி சார்பில்இலங்கைத்தமிழருக்காக திருவல்லிக்கேணி தேரடிதிட்லில் உண்ணாவிரதம் நடைபெற்றது.

இதில் மார்க்சிஸ்ட்கட்சி தமிழ்மாநில செயலாளர் நல்லசிவன் திண்டுக்கல் வரதராசன், ரமணி எம்.எல்ஏ. சங்கரய்யா முத்தையா, ஜானகி அம்மாள் உள்ளிட்டஏராளமான மார்க்சிஸ்ட்கள் பங்கேற்றனர்.

### கா. கா. தே. கா.

காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ்தலைவா குமரி அனந்தன் தலைமையில்

4-ம் பக்கம் பார்க்க

# புரட்சித்தலைவரை தரிசித்த 5 லட்சம் மக்கள்

சென்னை. செப். 24—சென்னையில் உண்ணா நோன்பு மேற்கொண்டிருக்கும் முதல்வர் புரட்சித்தலைவரை பிற்பகல் 2 மணி வரையில் ஏறத்தாழ ஐந்து லட்சம் மக்கள் தரிசித்திருக்கிறார்கள்.

மாலை ஆறு மணிக்குள் மேலும் ஐந்து லட்சம் மக்கள் புரட்சித்தலைவரை தரிசித்து ஈழத தமிழர்களுக்காக அவர் நடத்தும் அறப்போருக்கு ஆதரவு தெரிவிப்பார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

அண்ணா சமாதி அருகே இன்று தலைமைச் செயலாளர் டி. வி. அந்தோணி நிருபர்களிடம்கூறியதாவது:

மக்கள் கூட்டம் வரும் என்று கருதினோம். இவ்வளவு பெரிய கூட்டம்வரும் என்று எதிர்பார்க்கவில்லை.

கூட்டத்தை சமாளிக்க எல்லா நடவடிக்கைகளையும் எடுத்து வருகிறோம்.

காலை 6 மணி முதல் பிற்பகல் 12 மணி வரை சுமார் 3 லட்சத்துக்கும் மேற்பட்டவர்கள் வந்து சென்றுள்ளனர். இரு பக்கமும் 5 கிலோ மீட்டர் நீளத்துக்கு மக்கள் சாரி சாரியாக வந்த வண்ணம் இருக்கிறார்கள். மாலையில் சென்னை நகரின் முக்கால் பகுதி மக்கள் இந்தப்பகுதிக்கு வருவார்கள் என்று எதிர் பார்க்கிறோம். எந்தக்கூட்டத்தையும் கட்டுப்படுத்த எல்லா முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டு வருகின்றன. அவசர உதவி வண்டிகள் டாக்டர்கள் எல்லாம் தயார் நிலையில் இருக்கிறார்கள். சென்னை நகரில் 62க்குமேற்பட்ட இடங்களில் உண்ணாவிரத நோன்பு மேற்கொள்ளப்பட்டுள்ளன. தமிழகம் முழுவதும் 25 முக்கிய இடங்களில் அமைச்சர்களும் தலைவர்களும் பஙகேற்கிறார்கள் ஒவ்வொரு இடத்திலும் 3 ஆயிரம் முதல் 10 ஆயிரம் வரை மக்கள் உண்ணாவிரதம் இருக்கிறார். கள்.

சென்னை நகரில் கடைகள் முழுமையாக அடைக்கப்பட்டுள்ளன பஸ்கள், ரெயில்கள் ஓடவில்லை.

மக்கள் சைக்கிள்களிலும் நடந்தும் வருகிறார்கள். எந்த அசம்பாவித சம்பவமும் ஏற்படவில்லை. அமைதியாக உள்ளது.

இலங்கைத் தமிழர் பிரச்சினையில் நமது ஒற்றுமையையும் அனுதாபத்தையும் இலங்கைக்கும் மற்ற நாடுகளுக்கும் எடுத்துக்காட்டும் வகையில் இந்த உண்ணா

4 ம் பக்கம் பார்க்க



முதல்வர் புரட்சித்தலைவர் சென்னையில் இன்று உண்ணாவிரதம் இருந்த எழுச்சிக் கோலம்

சமுதாயம்

ஒவ்வொருவரும் தம் மனத்திலுள்ள மாசுகளை நீக்கிக் கொண்டால் சமுதாய மாசு தன்னாலே நீங்கிவிடும்.

—பேரறிஞர் அண்ணா

கற்பனை

கற்பனைகள் விபரீதமில்லாத வகையில் இருக்குமானால் அதை வரவேற்கலாம் பயனற்ற கற்பனைகள் வேண்டாம்.

—தந்தை பெரியார்

## அரசு ஊழியர் உண்ணாவிரதம்

இலங்கைத் தமிழர்களுக்காக அரசு ஊழியர் சங்கத் தலைவர் சிவ இளங்கோ இன்று தனது இல்லத்தில் குடும்பத்துடன் உண்ணாவிரதம் இருந்தார். அரசு ஊழியர் சங்க கட்டிடத்தில் மாநிலப் பொருளாளர் நெல்லைமணி தலைமையில், தலைமை நிலையச் செயலாளர் கண்ணன் மற்றும் மாவட்ட இணைப்பு சங்க நிர்வாகிகள் உட்பட பலர் உண்ணாவிரதம் இருந்தனர்.

நந்தனம் அரசு குடியிருப்பில் துணைத் தலைவர் கலியபெருமாள் உட்பட அக்குடியிருப்பில் இருந்தவர் அனைவரும் இன்று உண்ணாவிரதம் இருந்தனர், அதே போல் தேனாம்பேட்டை அரசு அலுவலர் குடியிருப்பிலும் உண்ணாவிரதம் இருந்தனர்.

# ஆர்.எம்.வீ. தலைமையில் ஆயிரக்கணக்கானோர் உண்ணாவிரதம்

தாம்பரம், செப். 24— அறநிலையத்துறை அமைச்சர் ஆர்.எம்.வீ. தலைமையில் இன்று பல்லாயிரக்கணக்கான கழக தொண்டர்களும் பல்வேறு கட்சியினரும் தாம்பரம் ஜீவா பூங்காவில் உண்ணாநோன்பு மேற்கொண்டனர்.

இன்று அதிகாலை சுமார் 5 மணிக்கு முன்னதாகவே தாம்பரம் மற்றும் சுற்றுப்புறபகுதிகளிலிருந்து கழகத் தோழர்களும் பல்வேறு கட்சியினரும் ராமகிருஷ்ணாபுரத்தில் இருந்து ஊர்வலமாக ஜீவா பூங்காவை நோக்கி வந்தனர்.

### மாற்று கட்சியினர்

மேற்கு தாம்பரம் ஜீவா பூங்காவில் அமைக்கப்பட்டுள்ள உண்ணாவிரத பந்தல் மேடையில் சரியாக 5.55 மணிக்கு அமைச்சர் ஆர்.எம்.வீ. வந்தமர்ந்தார்.

அவருடன் செங்கற்பட்டு தொகுதி நாடாளுமன்ற உறுப்பினர் ஜெகத்ரட்சகன் புதுடெல்லியில் உள்ள தமிழக விசேஷ பிரதிநிதி ஜி.ஆர். எட்மண்ட், தாம்பரம் தொகுதி எம்.எல்.ஏ. எல்ல ராசமாணிக்கம் செங்கை மாவட்ட செயலாளர் கும்மிடிபூண்டி எம்.எல்.ஏ. முனிரத்தினம் கிருப்பூர் தமிழ்மணி, வி.வி. கந்தசாமி நகர செயலாளர் என்.சி. கிருஷ்ணன் செல்லமுத்து, தாம்பரம் இந்திராகாங்கிரஸ்தலைவர் எஸ்.பி. பகவன்தாஸ் செங்கை மாவட்ட இந்திரா காங்கிரஸ்துணைத்தலைவர் தா.மு. தனபால், அழகிரிசாமி, அருணாசலம், வெங்கடேசன், கண்ணைய்சாம். இந்திய கம்யூனிஸ்ட் மக்கள் தாசன், பாரதிய ஜனதா தலைவர் கே. நாராயணராவ் ஜனதாவைச் சேர்ந்த ராமன், காந்தி காமராஜ் தேசிய காங்கிரசைச் சேர்ந்த சி.எஸ். வேதாசலம் மார்க்சிஸ்ட் கட்சி ரவீந்திரன். தா.மு. கோவிந்தன், தமிழ்நாடு நகராட்சி ஆணையர் சங்க மாநிலத் தலைவர் சி.எஸ்.சிவசாமி, உயர்நிலை அலுவலர் சங்கத்தைச் சேர்ந்த எஸ் கருணாகரன். பா.தவமணி, மற்றும் ஏராளமான பேர் உண்ணாவிரதத்தை மேற்கொண்டனர்.

நிதிக்கு 1001 ரூபாய் அளித்தார் தமிழ் மணியின் மகன் காணா நிதியும் 101 ரூபாய் நிதி அளித்தார், பி. ஜெயகுமார் ரூ.501 நிதி அளித்தார்.

இன்று தாம்பரம் சேலையூரில் இருந்து சுமார் 600க்கும் மேற்பட்ட கழகத் தொண்டர்கள் உண்ணாவிரதப் பந்தலுக்கு ஊர்வலமாக வந்தனர்.

புரட்சித் தலைவர் வாழ்க அண்ணா நாமம் வாழ்க என்றும் அவர்கள் கோஷமிட்டனர் இலங்கை அரசை கண்டித்தும் கோஷங்கள் வானைப் பிளந்தன,

### அகதிகள் நிதி

அமைச்சர் ஆர்.எம்.வீ. உண்ணாவிரத பந்தல் மேடைக்கு வந்த போது சட்டமன்ற உறுப்பினர் எல்ல. ராசமாணிக்கம் அவருக்கு மாலை அணிவித்து வரவேற்றார். திருப்போரூர் தொகுதி எம்.எல்.ஏ தமிழ்மணி 10 ரூபாய் நோட்டுகளால் ஆன மாலை அணிவித்து அதன் மூலம் இலங்கைத்தமிழ் அகதிகள்

## ஆர்.எம்.வீ. ஒருமாத சம்பளம் நன்கொடை

சென்னை, செப். 24— இலங்கை அகதிகள் நிதிக்கு அமைச்சர் ஆர். எம். வீ. தனது ஒரு மாதச் சம்பளமான 1700 ரூபாயை வழங்குவதாக அறிவித்தார். ஜெகத்ரட்சகன் எம்.பி தனது ஒரு மாதச் சம்பளமான 1750 ரூபாயை அளிப்பதாக அறிவித்தார்.

# ஸ்டுடியோக்களில் படப்பிடிப்பு ரத்து

சென்னை, செப். 24— இலங்கைத் தமிழருக்கு ஆதரவாக தமிழகத்தில் அனைத்துக்கட்சி சார்பில் இன்று நடைபெறும் பந்தில் திரையுலகத்தினரும் ஈடுபட்டுள்ளனர். இதனால் இன்று தமிழகத்திலுள்ள ஸ்டுடியோக்களில் படப்பிடிப்பு ரத்து செய்யப்பட்டது. தமிழகம் முழுவதும் உள்ள திரையரங்குகளும் மாலை வரை மூடப்பட்டுள்ளன. மாலை 6 மணிக்கு மேல் வழக்கம் போல் சினிமா காட்சிகள் நடைபெறுகின்றன.

இலங்கைத்தமிழருக்குஆதரவாக இன்று அனைத்துக் கட்சிகள் சார்பில் நடைபெறும் பந்தில் தமிழகமே ஒரே குரலில் நின்று செயல்படுகிறது.

இலங்கைத் தமிழருக்கு ஆதரவாக அனைத்துக் கட்சி பிரதிநிதிகள், சமூகநல அமைப்புகள், அரசு ஊழியர் அமைப்புகள் இப்படியெல்லா பிரிவினரும் ஈடுபடுகின்றனர்.

இலங்கைத் தமிழருக்காக நடைபெறும் பந்தில்திரையுலகத்தவரும் ஈடுபட்டுள்ளனர் நடிகர் நடிகையர் உண்ணாவிரதம் இருப்பதால் இன்று ஸ்டுடியோக்களில் படப்பிடிப்பு ரத்து செய்யப்பட்டுள்ளது, சென்னையிலுள்ள வாகினி. ஏ.வி.எம் பிரசாத், அருணாசலம், முருகாலயா உள்ளிட்ட எல்லா ஸ்டுடியோக்களும் இன்று படப்பிடிப்பு ரத்து காரணமாக வெறிச்சோடிக் கிடக்கிறது.

தென்னிந்திய நடிகர் சங்கத்தலைவர் எஸ்.எஸ்.ஆர். தலைமையில் நடிகர், நடிகையர் இன்று தியாகராய நகரிலுள்ள நடிகர் சங்க கட்டிடத்தில் உண்ணாவிரதம் இருந்தனர்.

இந்த உண்ணாவிரதத்தில் சிவகாணு, டி.வி. நாராயணசாமி, பி.எஸ். வீரப்பா, டி. என். கிருஷ்ணன் சட்டாம்பிள்ளை வெங்கட்ராமன், கே.ஏ. தங்கவேலு, சரோஜா தங்கவேலு, தியாகராஜன், மோகன், எஸ்.வி.சேகர், சிவக்குமார் நளினி, விசு, சந்திரசேகர், விஜய்காந்த், எஸ்.பி. முத்துராமன், ஸ்ரீபிரியா உள்ளிட்ட பலர் பங்கேற்றனர்.

### சமையல் கலை சங்கத்தார்

இலங்கைத் தமிழருக்காக இன்று நடைபெறும் உண்ணாவிரத போராட்டத்தில் தென்னிந்திய சமையல் கலை சங்கத்தாரும் ஈடுபட்டுள்ளனர். இச்சங்கத்தை சேர்ந்த பிரதிநிதிகள் மயிலாப்பூர் சித்திரக் குளம் அருகே உண்ணாவிரதம் இருந்தனர்.

### வி. ஜி. பி.

இலங்கை தமிழர்களுக்கு ஆதரவாக இன்று அண்ணா சாலையில் உள்ள அவர்களது அலுவலகத்தில் உண்ணாவிரதம் இருந்தனர் வி.ஜி. பன்னீர்தாஸ், வி.ஜி. சந்தோஷம் அவர்களது துணைவியார்கள் மற்றும் வி.ஜி.பி. ஊழியர்கள் ஆகியோர் உண்ணாவிரதம் இருந்தனர்.

# முனு ஆதி தலைமையில் உண்ணாவிரதம்

சென்னை, செப். 24— இலங்கைத்தமிழர்களுக்கு ஆதரவாக பெருங்களத்தூரில் விவசாய உயர் மட்டக் குழுத்தலைவர் முனு ஆதி உண்ணாவிரதம் இருந்தார்.

இலங்கைத் தமிழர்கள் படுகொலையைக் கண்டித்து தமிழகம் முழுவதும் இன்று உண்ணாவிரதம் இருந்து வருகின்றனர்

பெருங்களத்தூரில் விவசாய உயர் மட்டக்குழுத் தலைவர்முனு ஆதி தலைமையில் ஆயிரக்கணக்கானோர் உண்ணாவிரதம் இருந்தனர். இதில் கே.ஆர்.ராமசாமி, ராசகோபால், சுந்தரம், சந்திரன் சங்கரன், தாஸ், நாகமேகத்திரன், சுரேஷ் பாபு, நடராஜதேவர் சம்பந்தம் பாஸ்கரன் ஜெயராமன், தேவபிச்சை, ஜெயகோபால், அருணாசலம் லலிதா குமாரி, சௌந்திரபாண்டியன். சிவராஜ், மணி ராதா, அந்தோணி, ராமதாஸ். சண்முகம் ஏழுமலை, அரங்கநாதன் குமரசன், மற்றும் ஆயிரக் கணக்கானோர் இதில்கலந்து கொண்டனர்.

# கொதித்தெழுந்தது கோவை
# அரங்கநாயகம் தலைமையில் உண்ணாவிரதம்

கோவை. செப். 24— ஈழத் தமிழர்கள் படுகொலை செய்யப்படுவதைக் கண்டித்து கோவையில் அமைச்சர்கள் அரங்கநாயகம், நல்லுசாமி ஆகியோர் தலைமையில் பல்லாயிரக்கணக்கான தொண்டர்கள் உண்ணாவிரதம் மேற்கொண்டனர் மாவட்டக்கலெக்டர் அலுவலகம் முன்பு உண்ணாவிரத அறப்போர் துவங்கியது.

அமைச்சர்களுடன் பாராளுமன்ற உறுப்பினர்கள் ஜி. வரதராஜலு; அண்ணா நம்பி நகர் மாவட்டச் செயலாளர் மலரவன், ஏ. எம். சையதுமுகமது, பி. பாலசுப்பிரமணியம். மாவட்ட எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் க. மருதாசலம் பேரூர் சண்முகசுந்தரம், சிங்கை நடராசன் புரட்சித் தம்பி, சேரள சுந்தரம் காட்டூர் சண்முகம் ந.கதிர்வேலு, சிங்கைபாலுதொழிற் சங்க அணி சார்பாக ந. கருப்புசாமி, யூ ஆர். கிருஷ்ணன் அ.பழனிச்சாமி. க.சு. மருதாசலம், பி.கிருஷ்ணன், க. உசேன், வேலுமணி, பி வெள்ளைச்சாமி. மாணவர் அணி சார்பாக சூலூர் கந்தநாதன், டாக்டர் நடராசன், லிங்கராஜ் மகளிர் அணி சார்பாக பி. டி. லட்சுமி, ராஜம்மாள், மணிமேகலை, கணேசம்மாள், அம்மாசி அம்மாள். கிளைச் செயலாளர்கள் உட்பட பல்லாயிரக்கணக்கான தொண்டர்கள் உண்ணாவிரதத்தில் பங்கு கொண்டனர்.

### தமிழரசு கழகம்

தமிழரசுக் கழகத்தின் சார்பாக காமராஜ். திராவிடர் கழகத்தின் சார்பாக மேயர் ராமசாமி ஆகியோரும் கழகத் தொண்டர்களுடன் உண்ணா நோன்பு மேற்கொண்டனர். மக்கள் சாரை சாரையாக வந்து உண்ணாவிரதம் இருக்கும் பல்லாயிரக்கணக்கான தொண்டர்களுக்கு வாழ்த்துக் கூறுகின்றனர்.

உண்ணாவிரதம் மேற்கொள்ள காலை 5.55 மணிக்கு அமைச்சர்கள் அரங்கநாயகமும் நல்லுசாமியும் வந்தபோது மாவட்டச் செயலாளர் மலரவன் கைத்தறி ஆடைகள் அணிவித்து வரவேற்றார்.

இந்திரா காங்கிரஸ் ஊழியர்கள், நாடாளுமன்ற உறுப்பினர் டெக்சாஸ் குப்புசாமி தலைமையில் உண்ணாவிரதம் இருந்தனர்.

# மோகனரங்கம் தலைமையில் உண்ணாவிரதம்

சென்னை செப். 24— இலங்கைத் தமிழர்களுக்கு ஆதரவாக ஆலந்தூர் பெருநகரம் சார்பில் மோகனரங்கம் எம். பி. உண்ணா விரதம் இருந்தார்.

இலங்கையில் தமிழர்களை சிங்கள ராணுவத்தினர் கொன்று குவிப்பதைக் கண்டித்து தமிழகம் முழுவதும் இன்று ஒரு நாள் 'பந்த்' மற்றும் உண்ணாவிரதம் இருப்பது என்று தமிழக அரசு முடிவு செய்தது. இதையொட்டி தமிழகம் முழுவதும் இன்று பந்த் நடைபெற்றது.

ஆலந்தூர் பெருநகரம் சார்பில் மோகனரங்கம் எம்.பி தலைமையில் இன்று பரங்கிமலை ரயில் நிலையம் முன்பு பல்லாயிரக்கணக்கானோர் உண்ணாவிரதம் இருந்தனர்.

நகர செயலாளர் லெனின் பாலன், கோதண்டராமன். ராஜாடாதர், அரங்கநாதன் ராஜேஸ்வர், காசிநாதன் ராதா, பக்தவத்சலம் மோகன், சீனிவாசன் வட்ட செயலாளர்கள் மற்றும் பிரதிநிதிகள் சந்தான கிருஷ்ணன், கோபால், சீனிவாசன், வேலு, கந்தசாமி குமாரசாமி, ராதாகிருஷ்ணன், சுந்தர், ராஜமாணிக்கம், ராஜகோபால், ஆனந்தி, நிர்மலாகுணசேகரன், திராவிடர் கழகம மணி, இந்திய கம்யூனிஸ்டு, நாராயணன் ராமன், ஜெய்சங், தமிழரசு, கழகம்தேசமுத்து, பட்டாபிராமன், ஆறுமுகம், ஜனதா கட்சியைச் சேர்ந்த பலராமன், சீனிவாசன், மூசா, கா.கா.தே.கா, கட்சியைச் சேர்ந்த ஜோதி மார்க்சிஸ்ட் பொன்முடி மற்றும் பல்லாயிரக்கணக்கானோர் உண்ணாவிரதத்தில் கலந்து கொண்டனர்.

### காலடிபேட்டை

இலங்கைத் தமிழர்களுக்கு ஆதரவாக திருவெற்றியூர் காலடிப்பேட்டையில் இந்திரா காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர் குமாரசு ஜெயபால் தலைமையில் இந்த உண்ணாவிரதம் இருந்தனர் அதில் குருசாமி, சண்முகவேலு, எத்திராஜ், பூதி மோகன் ஆகியோர் பங்கேற்றனர்.

## பாண்டியன் எக்ஸ்பிரஸ் தாம்பரத்தில் நிறுத்தம்

சென்னை, செப். 24— தமிழ்நாடு முழுவதும் மேற்கொள்ளப்படும் உண்ணாவிரதம், முழு கதவடைப்பு காரணமாக இன்று சென்னை நோக்கி வந்த பாண்டியன் எக்ஸ்பிரஸ் இன்று காலை தாம்பரத்தில் நிறுத்தப்பட்டது.

பந்த் காரணமாக இந்த ரெயிலில் 50 பயணிகளே தாம்பரம் வந்தனர்.

## வளசரவாக்கத்தில் கழகத் தோழர்கள் உண்ணாவிரதம்

சென்னை, செப். 24— வளசரவாக்கத்தில் கழகத் தோழர்கள் உண்ணாவிரதம் இருந்தனர்.

வளசரவாக்கம் ஜானகி நகரில் இத்த உண்ணாவிரத அறப்போர் நடந்தது.

விருகை ஜெயராமன் தலைமையில் ஏராளமான பேர் உண்ணாவிரதம் இருந்தனர்.

ஜனார்த்தனம், எம்.ஜி.ஆர். நகர் முத்து. சாலிக்கிராமம் தேவராஜ், மன்னாரு, பசுபதி ஆகியோர் உண்ணாவிரதம் இருந்தனர்.

### தாய்மார்கள் ஆர்வம்

தாய்மார்களும் ஆர்வத்துடன் வந்து உண்ணாவிரதத்தில் பங்கு பெற்றது குறிப்பிடத்தக்கது.

திரைப்பட நடிகை மீனாட்சி பாட்டி. ஜீனியர் பாக்யராஜ் ஆகியோர் அங்கு உண்ணாவிரதம் இருந்தனர்.

கடைகள் அடைக்கப்பட்டு "பந்த்" முழுவெற்றி பெற்றது.

# அமைச்சர் சவுந்தராசன் சிவகங்கையில் உண்ணாநோன்பு

(தொலைபேசிச்செய்தி) சிவகங்கை, செப் 24. சத்துணவுத் திட்ட அமைச்சர் திருச்சி ஆர் சவுந்தரராசன் சிவகங்கையில் உண்ணா விரதம் இருந்தார்.

சிவகங்கை தொண்டி ரோடு அரண்மனை வாசல் முன்பாக உண்ணாவிரத அறப்போர் இன்று காலை 6மணிக்குக் தொடங்கியது.

அமைச்சர் சவுந்தரராசனும் மற்றும் தோழர்களும் காலை 6 மணிக்கு முன்பே உண்ணாவிரதம் இருக்கும் இடத்துக்கு வந்துவிட்டனர். 6.மணிக்குமுன்பே உண்ணாவிரதம் தொடங்கினர்.

அமைச்சருடன் கழகத் தோழர்கள் முனியாண்டி முனியப்பன், தியாகராஜன் மதிவாணன், உலகநாதன் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த வி. ஆர். அய்யாத்துரை, லெனின் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த மோகனசுந்தரம் ஆகியோர் உட்பட ஆயிரக்கணக்கானோர் சிவகங்கையில் உண்ணாவிரதம் இருந்தனர் பொது மக்கள் ஆதரவுடன் முழு அடைப்புவெற்றி பெற்றது. கடைவீதி வெறிச்சோடிக் கிடந்தது

# தமிழக மேலவையில் 4 இடம் காலி ஆகிறது

சென்னை, செப். 24. தமிழ்நாடு சட்டமேலவையில் 2 பட்டதாரி தொகுதிகளுக்கும், 2 ஆசிரியர் தொகுதிகளுக்கும் அடுத்த ஆண்டு மார்ச் ஏப்ரல் மாதங்களில் தேர்தல் நடைபெறவிருக்கிறது.

இந்த 4 தொகுதிகளுக்கான தற்போதைய உறுப்பினர் பதவிக்காலம் வரும் 21-4 1986 முதல்முடிவடைவதை ஒட்டி இந்த இடங்களுக்கு தேர்தல் நடக்கவிருக்கிறது.

அதற்கான வாக்காளர் பட்டியல் தயாரிக்கும் வேலை 1.10 85ல் தொடங்கப்பட்டுள்ளது.

தஞ்சை, திருச்சி, புதுக்கோட்டை ஆகிய மாவட்டங்களுக்கான தமிழ்நாடு கிழக்கு மத்திய பட்டதாரி தொகுதி, கோவை, சேலம், தர்மபுரி, பெரியார், நீலகிரி ஆகிய மாவட்டங்களுக்கான தமிழ்நாடு மேற்கு மத்திய பட்டதாரி தொகுதி ஆகிய 2 பட்டதாரி தொகுதிகள் ஆகும்.

சென்னை, செங்கற்பட்டு மாவட்டங்களுக்கான ஆசிரியர் தொகுதி, மதுரை அண்ணா ராமநாதபுரம், காமராஜர் பசும்பொன் முத்துராமலிங்கம் ஆகிய மாவட்டங்களுக்கான தொகுதி ஆகிய தொகுதிகள் ஆகும்.

வாக்காளர் பட்டியலில் பதிவு செய்து கொள்வதற்காக விண்ணப்பம் செய்து கொள்ள வேண்டிய கடைசி நாள் 6—11—85 வாக்காளர் பட்டியல் வெளியிடப்படும் நாள் 15.2.86

# வெறிச்சோடிக் கிடந்த ரயில் நிலையங்கள்

சென்னை, செப். 24— சென்னை சென்ட்ரல் ரயில் நிலையம் எப்போதும் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருக்கும். ஆனால் இன்று இலங்கைத்தமிழருக்காக நடக்கும் பந்த் காரணமாக ரயில் நிலையமே வெறிச்சோடிக்கிடந்தது.

சென்ட்ரல் ரயில்நிலையம் எதிரேயும் போக்குவரத்து விறுவிறுப்பாக இருக்கும் இன்று வெறிச்சோடிக்கிடந்தது சாலையில் ஓரிருவர் நடமாட்டத்தை தவிர வேறு எதுவும் இல்லை,

எழும்பூர், சைதாப்பேட்டை, மாம்பலம். கோடம்பாக்கம், நுங்கம்பாக்கம், பூங்கா நகர் ரயில் நிலையங்கள் காலை 8 மணி முதல் விறுவிறுப்பாக இருக்கும். ரயில் நிலையத்திற்குள் ரயிலைப் பிடிக்க குழுமியிருக்கும் கூட்டம், ரயிலை விட்டு இறங்கி பரபரப்பாக அலுவலகத்திற்கு செல்வோர் கூட்டம் இப்படி எப்போதும் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருக்கும் இந்த ரயில் நிலையங்கள் பந்த் காரணமாக வெறிச்சோடிக்கிடந்தன

தென் பகுதிகளிலிருந்து சென்னை எழும்பூருக்கு வரும் நெல்லை எக்ஸ்பிரஸ், பாண்டியன் எக்ஸ்பிரஸ் மலைக்கோட்டை எக்ஸ்பிரஸ் போன்ற ரயில்களில் ஆயிரக்கணக்கான மக்கள் தினமும் வந்து இறங்குவர். பந்த் காரணமாக பலர் பயணத்தை ஒத்திப் போட்டதாலோ என்னவோ இன்று காலை சென்னை எழும்பூர் வந்த ரயில்கள் எல்லாம் காலியாகவே வந்தன.

## வரி விளம்பரம்

R.V.N. வீடியோகோச் டிராவல்ஸ்

R.V.N. & BROS சென்னை TO தூத்துக்குடி செல்ல தினசரி மாலை 8 மணிக்கு (டீலக்ஸ் வீடியோ கோச்) பஸ் புறப்படும் ரோஸ் லேண்ட் லாட்ஜ், ரெயில்வே ஸ்டேஷன் எதிரில் எழும்பூர். சென்னை—8 கிளை வெல்கம் டிராவல்ஸ், தூத்துக்குடி.

## ஏலவிற்பனை

1. எச். சம்பத்ராஜ் சௌக்கார் 179, குளைமேடு ஹை ரோடு சென்னை 94 (1.2.84 முதல் 15.8.84 முடிய) ஏலத்தேதி 4.10.85

2. ராம்பால் & கோ 11, நியுபஜார் டாக்டர் சதாசிவம் ரோடு. சென்னை.17 (1.2.0 முதல் 30.5.84 முடிய) ஏலத்தேதி 4.10.85

3) உத்தம்சந்த்ஜெயின் 19.முனியப்ப முதலி தெரு சென்னை—21 (1—6—80 முதல் 31—5—84 முடிய) ஏலத்தேதி 4—10—85

4) ஆர்.கே.ஜெயின், 23 பிடாரியார் கோவில்தெரு சென்னை—1 (10—8—80 முதல் 15—8—82 முடிய) ஏலத்தேதி 4—10—85

5. ஆர். பூல்சந்த்சோர்டியா 47 அருணாசல நாய்கன் தெரு சென்னை— 2 (5-7-79 முதல் 30 5 84 முடிய) ஏலத்தேதி 7-10-85

6. பாபுலால் மேத்தா 29-1 பி. வி. கோவில் தெரு சென்னை—4 (1-12-79 முதல் 30-7-84முடிய) ஏலத்தேதி 7-10 85

7. சி. மனக்சந்த். 139 வால்டாக்ஸ் ரோடு சென்னை-3 (25—8—79 முதல் 30—7—84 முடிய) ஏலத்தேதி 7-10-85.

8. கே. சபூர்சந்த் பொரானா 9, சண்முகராயன் சந்து சென்னை-1 (1-5-84 முதல் 30-7-84 முடிய) ஏலத்தேதி 7-10-85.

9. விமலாபாய் 139, வால்டாக்ஸ் ரோடு. சென்னை-3. (5—8—83 முதல் 5—12—83 முடிய) ஏலத்தேதி 7—10—85

10. ஆர். மனக்சந்த் 48, வில்லேஜ் ரோடு. சென்னை—34 (20—1—80 முதல் 20—2—84 முடிய) ஏலத்தேதி 8—10—85

11. எம் மோஹன்லால் & கோ 6 நூர்வீராசாமிஐயர் சந்து, சென்னை-34. (10-9-78 முதல் 25-6-84 முடிய) ஏலத்தேதி 8.10.85

12. ஆர். சந்தன்மல் சௌக்கார், 71, சிங்கண்ண செட்டி தெரு, சென்னை 2 (1.1.0 முதல் 24.8.82 முடிய) ஏலத்தேதி 9.10.85

13. மேனா கன்வர், 70 சிங்கண்ண செட்டி தெரு. சென்னை-2 (20-1.80முதல் 10-8-85 முடிய) ஏலத்தேதி 9-10-85

14. தன்சுக்சந்த், 30, அருணாசல நாய்கன் தெரு. சென்னை-2(21-2-80 முதல் 15-7.84 முடிய) ஏலத் தேதி 9 10 85.

15. கோபிசந்த் ஜெயின் 42 ஏ. எம். முதலிதெரு சென்னை-79 (10-11-83 முதல் 30-7-84 முடிய) ஏலத்தேதி 9-10-85

16. ரதன்சந்த் நரேந்திர குமார் 7, முதலாவது மெயின் ரோடு கிழக்கு ஷெனாய்நகர் சென்னை-30 (15-5 81 முதல் 28-6-84 முடிய) ஏலத்தேதி 10-10-85

17. பி.தர்மிசந்த் ஜெயின் 4, வீரபத்ர ஆசாரி தெரு சென்னை-2(10 10 78முதல் 30.7-84 முடிய) ஏலத்தேதி 10-10-85

18. என்.ஜெயலால்சர்மா 35, அருணாசல நாய்கன் தெரு, சென்னை-2( 25-1 80 முதல் 16-8-84 முடிய) ஏலத்தேதி 10-10-85

19. பி.பவார்லால் ஜெயின் 562, பி.எச்.ரோடு சென்னை 106 (1-12—80 முதல் 6—8—84 முடிய) ஏலத்தேதி 10—10—85

மேற்படி கடைகளில் அடகுவைத்து மீட்கப்படாத பொருட்களை மேற்படி தேதிகளில்காலை10மணிக்கு மேல் வருவாய் துறை அதிகாரிகள் முன்னிலையில் ஆக்ஷன்தார்கான எம் ஜவஹர்லால் போரா அவர்களால் 60, சாமிபண்டாரம் தெரு சிந்தாதிரிப் பேட்டை சென்னை—2 எனும் அவர்களின் பழையவிலாசத்திற்கு பதிலாக புதிய விலாசமான 31 மங்கபதிநாய்க்கன் தெரு. சிந்தாதிரிப்பேட்டை சென்னை—2 விலாசத்தில் ஏலம் போடப்படும்.

Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D M K. Perarignar Anna Trust Press at 34. Nelson Manickam Road, MADRAS-600029.

# ஈழத் தமிழர்களுக்கு உதவ
# புரட்சித்தலைவர் முன் அரசு ஊழியர் சபதம்

**சென்னை, செப். 24- இலங்கை தமிழர்களுக்கு உதவ முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில் அரசு ஊழியர்கள் சபதம் ஏற்றனர். இதற்கான நிதி வசூல் நேற்று துவங்கியது.**

இலங்கைத் தமிழர் நல்வாழ்வுக்காக இன்று தமிழ் நாடுமுழுவதும்முழுஅடைப்பும் உண்ணாவிரதமும் இருப்பதையொட்டி தமிழக அரசின் தலைமை செயலக அதிகாரிகள் ஊழியர்கள் எல்லோரும் நேற்றுமாலையில்சென்னை கோட்டையிலுள்ள அணி வகுப்பு மைதானத்தில் அஞ்சலி செலுத்துவதற்காக கூடினா

இக் கூட்டத்திற்கு முதல்வ புரட்சித்தலைவர் வந்து இருந்தார்.

கூட்டத்தில் அதிகாரிகள், ஊழியர்களின் பல்வேறு சங்கங்கள் நிறைவேற்றிய தீர்மானங்களை முதல்வர் புரட்சித் தலைவரிடம் கொடுத்தார்கள்.

அதுபற்றி தலைமைச் செயலாளர் டி.வி. அந்தோணி கூறியதாவது:-

தமிழ்நாட்டிலுள்ள தமிழ் அரசினுடைய 9 லட்சத்து 95 ஆயிரம் ஊழியர்களும் இலங்கைத் தமிழர் பிரச்சினையில் தங்களை ஒன்று படுத்திக் கொண்டு ஒரே மாதிரியான தீர்மானங்களை நிறைவேற்றி இருக்கிறார்கள்.

செவ்வாய்க்கிழமை உண்ணாவிரதம் இருப்பது என்றும் ஒரு நாள் சம்பளத்தை இலங்கை நிதிக்காக வழங்குவது என்றும் அந்த தீர்மானங்களில் ஒரே மாதிரியாக கூறியிருக்கிறார்கள்.

இவ்வாறு தலைமைச் செயலாளர் கூறியுள்ளார்.

இலங்கைத் தமிழர் பிரச்சினையை யொட்டி முதல்வர் புரட்சித்தலைவர்விடுத்த வேண்டுகோள் அறிக்கையை தமிழக அரசு பொதுத்துறை செயலாளர் யு. எஸ். நடராசன் வாசித்தார்.

அதன் பிறகு இலங்கைத் தமிழர் நிதிக்காக உண்டியல் வசூல் துவங்கியது.

## புரட்சித்தலைவர் நன்கொடை

முதல் நன்கொடையாக முதல்வர் புரட்சித்தலைவர் கத்தையாக 100 ரூபாய் நோட்டுக்களை உண்டியலில் போட்டார்.

அவருக்கு "இலங்கை தமிழர் நல்வாழ்வு நாள்" என்று எழுதிய கருப்பு சிறு கொடியை பொதுத் துறை துணைசெயலாளர் ஷீலா பாலகிருஷ்ணன் அணிவித்தார்.

அதன் பிறகு எல்லோரும் 2 நிமிடம் மவுனமாக நின்று இலங்கைத்தமிழர் துயருக்காக தங்கள் அஞ்சலியை செலுத்தினர்.

முடிவில்முதல்வர்புரட்சித் தலைவர் ஒலிபெருக்கிமுன்பு வந்து "அண்ணா நாமம் வாழ்க" "நன்றி" "வணக்கம்" என்று கூறினார். இதைக் கேட்டதும் அங்கு கூடியிருந்த அரசு ஊழியர்கள் உணர்ச்சிப் பெருக்கால் கண்ணீர் வடித்தனர்.

## கலெக்டர் வேண்டுகோள்

இந்தக் கூட்டத்திற்கு நீர்பாசனத்துறை அமைச்சர் யூசுப், டெல்லி சிறப்புப் பிரதிநிதி எட்மண்ட், அரசு உயர் அதிகாரிகள், ஊழியர்கள் எல்லோரும் வந்திருந்தனர்.

இலங்கைத்தமிழர் நிவாரணம் குறித்து சென்னை நகர மாவட்ட ஆட்சித்தலைவர் சைலோ கூறியிருப்பதாவது:-

இலங்கை தமிழர் நிவாரண நிதிக்கு தாராளமாக நிதி வழங்கவேண்டுகிறேன்.

இதற்காக சென்னையில் உள்ள ஊர்க்காவல் படையினர் 24ந் தேதி முதல் 28ந் தேதி வரை உண்டியல் ஏந்தி பொது மக்களிடம் வருவார்கள். அவர்களிடம் நிதி அளிக்கலாம்.

நிதி அளிப்போர் மாவட்ட ஆட்சித் தலைவருக்கு நேரிடையாகவோ அல்லது அதற்கான அங்காரம் பெற்ற அரசு அலுவலர்களிடமோ "செக்" அல்லது "டிராப்ட்" மூலம் பணம் வழங்கலாம். மேற்கண்டவாறு அவர் கூறியுள்ளார்.

தமிழ்நாடு சட்டசபை செயலக ஊழியர் சங்கத்தினர் இலங்கைத் தமிழர் நிதிக்காக 2 ஆயிரத்து 501 ரூபாய் வழங்கியுள்ளதாக அச்சங்கத் தலைவர் மூர்த்தி அறிவித்துள்ளார்.

## வில்லிவாக்கத்தில் உண்ணாவிரதம்

சென்னை, செப். 24— வில்லிவாக்கம், பொன்மனச்செம்மல் எம்.ஜி.ஆர். மன்ற நற்பணி மன்றம், கலைக் காவலர் மக்கள் திலகம் எம்.ஜி.ஆர். மன்றம் மற்றும் 32 33 வது வட்ட எம்.ஜி.ஆர். இளைஞர் அணி சார்பில் இலங்கை தமிழர்களுக்காக இன்று எம்.டி.எச். சாலையில் உண்ணாவிரதம் இருந்தனர் இதில் ஜெயபால் மனோகரன். மொய்தீன், ராஜா. கிருஷ்ணமோகன், மகாலிங்கம், சுந்தர் மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

மதுரையில் அமைச்சர் காளிமுத்து இல்லத்துக்கு முதல்வர் புரட்சித தலைவர் சென்றிருந்தபோது எடுததபடம். முதல்வரின் துணைவியார் ஜானகி அம்மையார் உடன் இருக்கிறார்.

# அண்ணா நகரில் உண்ணாநோன்பு

சென்னை, செப். 24— சென்னை அண்ணா நகரில் பல்வேறு பகுதிகளில் அரசு ஊழியர்களும் பொது மக்களும் உண்ணாவிரதம் இருநதனர்.

அண்ணாநகர் டபுள்யூ. எஸ். காலனியில் வெங்கடேசன் உண்ணாவிரதத்தை தொடங்கி வைத்தார்.

கழகத்தோழர்கள் சந்திரசேகர், ஏசாம்பரம், ராமதாஸ், மைக்கேல் ஆகியோரும் காங்கிரஸ் தோழர்கள் நரசிம்மன், கண்ணன், நாராயணசாமி, திருவேங்கடம் ஆகியோரும் உண்ணாவிரதம் இருந்தனர். ஜனதாக் கட்சியினர் கிருஷ்ணன் தலைமையில் உண்ணாவிரதம் இருந்தார்கள்.

அண்ணாநகர் பஸ்நிலையம் குமங்கலம், காந்தி காலனி, ஷெனாய்நகர் ஆகிய பகுதிகளிலும் பலர் உண்ணா விரதம் இருந்து இலங்கை தமிழர்களுக்கு ஆதரவு தெரிவித்தனர்.

ஷெனாய்நகர் அரசு ஊழியர் குடியிருப்பு எதிரே பலர் உண்ணா விரதம் இருந்தனர் என். சகாதேவன், கே. கோபால், செல்வராஜ், ஜெகதீஸ்வரன், ஆர். சந்திரசேகரன் கோவிந்தராசன், எஸ். ரவீந்திரன் ஆகியோர் உண்ணாவிரதம் இருந்தனர்

## பெருங்குடி

சென்னை பெருங்குடி வியாபாரிகள் சங்கத்தினர் இலங்கைத்தமிழர்களுக்காக இன்று ஒருநாள் உண்ணாவிரதம் இருந்தனர். இதில் சுப்பையா, சவுந்திரராசன், நாராயணன் உட்பட பலர் கலந்து கொண்டனர்.

## திருவான்மியூர்

திருவான்மியூர் 105-வது வட்டம் சார்பில் இலங்கைத் தமிழர்களுக்காக கழகத் தோழர்கள் இன்று ஒருநாள் உண்ணா விரதம் இருந்தனர்.

இதில் செல்வராஜ், தேவேந்திரன், மற்றும்பலர் கலந்து கொண்டனர். இந்த உண்ணா நோன்பை எல்ல. ராசமாணிக்கம் துவக்கி வைத்தார்.

பாப்பையன் தலைமையில் இன்று காலை 6 மணிக்கு பல்லாயிரக் கணக்கான கழகத் தோழர்களும் பல்வேறு கட்சியினரும் பட்டுக் கோட்டை நகராட்சிமன்றம் எதிரில் உண்ணா நோன்பு மேற்கொண்டனர்.

ஜி.என். ராமச்சந்திரன் எம்.எல்.ஏ. வழக்கறிஞர் விவேகானந்தம், ஒன்றிய செயலாளர் விக்ரமன் சோமு, மணிஅய்யன், மாரிமுத்து, பெரிய கோட்டை தமிழ்மணி, முன்னாள் எம்.எல்.ஏ. ராஜேந்திரன், தண்டாயுதபாணி, பொன் நரசிங்கம் இந்திய கம்யூனிஸ்ட்சி. பக்கிரிசாமி, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் சுப்ரமணியம், ஆர். பழனிவேலு மற்றும் ஏராளமான பேர் உண்ணாவிரதம் இருந்தனர்.

## பட்டுக் கோட்டையில் உண்ணா நோன்பு

பட்டுக்கோட்டை, செப் 24 கதர் வாரியத்தின் துணைத் தலைவர் பட்டுக்கோட்டை

## வெறிச்சோடி கிடந்த விமான நிலையம்

சென்னை, செப். 24— இலங்கைத் தமிழருக்காக இன்று தமிழகத்தில் கழகம் உள்ளிட்ட அனைத்துக் கட்சிகள் நடத்தும் பந்த் காரணமாக சென்னை மீனம்பாக்கம் விமான நிலையம் வெறிச்சோடிக் கிடந்தது.

வழக்கமாக காலைநேரங்களில் சென்னை விமான நிலையம் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருக்கும். விமானத்திலிருந்து வரும் பயணிகளை ஏற்றி செல்ல விமான நிலைய வாயிலில் டாக்ஸிகளும், கார்களும் குவிந்து கிடக்கும், இன்று பந்த் காரணமாக விமானங்கள் பறக்க வில்லை. இதனால் விமான நிலையம் மட்டுமல்லாது விமான நிலையத்திற்கு வெளியேயும்போக்குவரத்து ஏதுமின்றி வெறிச்சோடிக் கிடந்தது.

## பஞ்சாப் சபாநாயகரை கொல்ல வெடிகுண்டா?

அமிர்தசரஸ், செப். 24- பஞ்சாப் சட்டசபை சபாநாயகர் பிரிஜ்பாஷ் மேரா இ. காங்கிரஸ் சார்பில் அமிர்தசரஸ் வடக்கு தொகுதியில் போட்டியிடுகிறார் அந்தத் தொகுதியில் இவர் பிரச்சாரம் செய்து வந்தார்.

அவர் புறப்படும் முன் அவரது காரை நோக்கி பட்டாசு போன்ற வெடி குண்டு வீசப்பட்டது. அதிர்ஷ்டவசமாக கார் புறப்பட்டு சென்றதும் அந்த குண்டு வெடித்தது, சபாநாயகரைக் கொல்ல இந்த வெடி குண்டு வீசப் பட்டிருக்கலாம் என்று தெரிகிறது.

இந்த சம்பவம் தொடர்பாக ஒரு வாலிபர் கைது செய்யப்பட்டுள்ளார்.

# கட்சி கட்டுப்பாட்டை மீறியவர்கள் மீது ராஜீவ் கடும் நடவடிக்கை

புதுடெல்லி, செப் 24- கட்சி கட்டுப்பாட்டை மீறி கட்சி விரோத செயலில் ஈடுபட்டதற்காக பஞ்சாப் மாநில காங்கிரஸ் தலைவர் உள்ளிட்ட பலரை கட்சியிலிருந்து விலக்கி பிரதமர் ராஜீவ் நடவடிக்கை எடுத்துள்ளார்.

பஞ்சாப் மாநில காங்கிரஸ் கமிட்டி தலைவராக உள்ள ராஜீந்தர்சிங் காங்கிரஸ் கட்சியின் அதிகார பூர்வ வேட்பாளர்களை எதிர்த்து 10 சட்டசபை தொகுதிகளில் தனது வேட்பாளர்களை நிறுத்தியுள்ளார். இதனால் ராஜீந்தர்சிங்கை பிரதமர் ராஜீவ் கட்சியிலிருந்து 6 ஆண்டுகளுக்கு நீக்கி வைத்துள்ளார்.

சஜிதா பேகம், ராம் ரத்தன் சர்மா, கர்தார், பல்பீர்சிங், சாகன்சிங்பம்ரா, துளசிராம் குசன் ரமேஷ் சந்தர், திலக்ராஜ், சேவாசிங், ராஜா ராமண்ணா, தாராசிங் ஆகியோர்கட்சியிலிருந்து 6 ஆண்டுகளுக்கு நீக்கிவைக்கப்பட்டுள்ளனர்.

கட்சி விரோத நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ள மற்றவர்களின், பட்டியல் எடுக்கப்பட்டு வருவதாகவும் விரைவில் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப் படுமென்றும் காங்கிரஸ் வட்டாரம் அறிவித்துள்ளது.

# ராஜீவ் தூதர் இலங்கைக்கு விரைகிறார்

புதுடெல்லி, செப். 24— இலங்கைத் தமிழர்களுக்காகமுதல்வர் புரட்சித் தலைவர் தலைமையில் தமிழகமே பொங்கி நிற்கும் இத்தருணத்தில், பிரதமர் ராஜீவின் தூதராக ரமேஷ் பண்டாரி இலங்கைக்கு வியாழனன்று செல்கிறார்.

விடுதலைப் புலிகளுக்கும் சிங்கள ராணுவத்துக்கும் இடையே போர் நிறுத்த ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளது அல்லவா?

போர்நிறுத்தத்தை மீறியதாக இரு தரப்பினரும் ஒருவரையொருவர் குற்றம் சாட்டியுள்ளனர்.

இலங்கைத் தமிழர் பிரச்சினைக்குத் தீர்வு காண அடுத்த கட்ட பேச்சு வார்த்தை தொடங்கு முன் போர் நிறுத்த ஒப்பந்தத்தை இரு தரப்பினரும் முழுமனதுடன் கடைபிடிக்க வேண்டும். அதன் மூலமே பேச்சுவார்த்தை வெற்றி பெறும் என்று இந்தியா கருதுகிறது.

## மீண்டும பேச்சு வார்த்தை

எனவே அடுத்தகட்ட பேச்சுவார்த்தை தொடங்கும் முன்பாக போர் நிறுத்தத்தை கடுமையாக செயல்படுத்த வேண்டும் நிபந்தனைகளை சிங்கள ராணுவம் தாக்கி விடக்கூடாது என்பதை வலியுறுத்த பிரதமர் ராஜீவின் தூதராக வெளிவிவகாரச் செயலாளர் ரமேஷ்பண்டாரி வரும்வியாழனன்று இரவு கொழும்புக்குப் பயணம் ஆகிறார்.

பண்டாரி அங்குவெள்ளிக் கிழமை ஒருநாள் இருந்து இலங்கைஅதிபர் ஜெயவர்த்தனேயைச்சந்தித்துப்போர் நிறுத்தத்தை கடைபிடிக்குமாறு வலியுறுத்துவார்.

ஈழ தேசிய விடுதலைமுன்னணித்தலைவர்கள் டெல்லியில் நேற்று பண்டாரியைச் சந்தித்துப் பேசினர். மீண்டும் செப்டம்பர் 30ந் தேதி அவர்கள் தொடர்ந்து டெல்லியில் பேசுவார்கள். பேச்சு நடத்திய ஈழ தேசிய விடுதலை முன்னணியினர் சென்னைக்குக் திரும்பி விட்டனர்

போர் நிறுத்தம் செயல்படுவதைக் கண்காணிக்க அதிகாரிகளற்ற கமிட்டி ஒன்றை இலங்கை அரசு நியமிக்க உள்ளது.

## பேச்சு திருப்தி

ஈழ விடுதலை முன்னணியினர் டெல்லியில் பிரதமருடன் பேச்சு நடத்தினர்,

அது பற்றி விடுதலைப் புலிகள் அமைப்பைச் சேர்ந்த வி பிரபாகரன் சென்னையில் கருத்துத் தெரிவித்தார். அவர்கள் நடத்திய பேச்சு வார்த்தை திருப்தியளிப்பதாக அவர் கூறினார்.

போர் நிறுத்தம் பற்றி பிரதமர் ராஜீவுடன் பேசப்பட்டுள்ளது தாங்கள் போர் நிறுத்தத்தை ஆதரிக்கிறோம். சிங்கள ராணுவமும் முழுமனதுடன் அதை ஏற்க வேண்டும் என்று பிரபாகரன் கூறினார்.

ரமேஷ் பண்டாரி வியாழனன்று இரவு இலங்கை செல்லுமுன் புதன்கிழமை சென்னை வந்து ஆலோசனை நடத்துகிறார்.

## தாம்பரம் தொகுதி அண்ணா பிறந்தநாள் விழா

தாம்பரம், செப். 24— தாம்பரம் தொகுதியில் பேரறிஞர் அண்ணாவின் 77வது பிறந்த தினவிழாக் கூட்டம் சிறப்பாக நடைபெற்றது.

தாம்பரம் நகராட்சி வளாகத்தில் அமைந்துள்ள அண்ணா சிலைக்கு கழக சட்டமன்ற உறுப்பினர் எல்ல. ராசமாணிக்கம் மாலை அணிவித்து மரியாதை செலுத்தினார்.

கழகக் கொடியையும் ஏற்றுவைத்தார் நூற்றுக்கணக்கான சிறுவர்களுக்கு இனிப்பு வழங்கப் பட்டது

விழாவிற்கு தலைமை நகர கழக செயலாளர் ஏ. செல்லமுத்து தலைமை தாங்கினார்.

விழாவில் டி எம்,ராகவன் மற்றும் ஏராளமான கழகத் தொண்டர்கள் பங்கேற்றனர்.

## சாப்பாட்டு "ராமன்"

புதுடெல்லி செப். 24- புதுடெல்லியில் இட்லி சாப்பிடும் போட்டி நடைபெற்றதில், இந்திய விமானப் படையைச் சேர்ந்த சிவராம் என்பவர் 15 நிமிடத்தில் 36 இட்லிகளை சாப்பிட்டு முதல் பரிசைப் பெற்றார்.

கன்னட மாதாந்திர பத்திரிகையான டெஹாவி கன்டிகர் என்ற பத்திரிகையின் சார்பில் இந்த இட்லி சாப்பிடும் போட்டி நடைபெற்றது.

பூசா கழகத்தைச்சேர்ந்த சாரங்காடி என்பவர் 26 இட்லிகளைச் சாப்பிட்டு இரண்டாவது இடத்தைப் பிடித்தார். ராமமூர்த்தி என்றமாணவர் 21 இட்லிகளை சாப்பிட்டு மூன்றாவது இடத்தை பிடித்தார்.

இந்தப் போட்டியில் 20 பேர் கலந்து கொண்டனர்.

## காலமானார்

ஆயிரம் விளக்கு தொகுதி எம்.ஜி.ஆர். இளைஞர் அணி செயலாளரும், தலைமைக்கழக பேச்சாளருமான நுங்கை மாறன் அவர்களின் தந்தை உடல் நலக் குறைவினால் 23-9-1985 திங்கட்கிழமை விடியற் காலை 1-45 மணியளவில் காலமானார்.

அவருடைய இல்லமான எண்:40 புட் நகர் பெரிய சாலை. நுங்கம்பாக்கம் சென்னை 34 லிருந்து சவ ஊர்வலம் சென்று மாலை 4 மணியளவில் நுங்கை இடுகாட்டில் இறுதிச்சடங்குகள் நடைபெற்றன.

இதில் அமைச்சர் க. எ. கே., அங்கமுத்து, எம் எல் சி. மற்றும் ஏராளமான கழகத் தோழர்களும் கலந்து கொண்டனர்.

# மெக்சிகோவில் அழுகுரல் ரீகன்மனைவி விரைகிறார் பல நாடுகள் உதவிகரம்

மெக்சிகோ, செப். 24- மூன்றாவதுநாளாக பயங்கர பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட மெக்சிகோ நகரம் தரைமட்டமாக காட்சி அளிக்கிறது. இடிபாடுகளும், பிணக்குவியல்களும் சிதறிக் கிடக்கின்றன மெக்சிகோவுக்கு உதவியளிக்க அமெரிக்கா, சோவியத்யூனியன்மற்றும் பல்வேறு நாடுகளும் முன்வந்துள்ளன.

கடந்த சில நாட்களில் 3 முறை பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட மெக்சிகோ நாட்டின் தலைநகரான மெக்சிகோ நகரம் சின்னா பின்னமாகி சுடுகாடாக காட்சி அளிக்கிறது. பல மாடி கட்டிடங்கள் தரை மட்டமாகி விட்டன.

## கட்டிடங்கள் தரைமட்டம்

சுமார்45லட்சம் மக்கள் தொகை கொண்ட ஜலிஸ்கோ மாநிலம். சியுதாத், ஸ்மான் முதலியநகரங்களில் பாதிப்பு பயங்கரமாக ஏற்பட்டுள்ளது. மெக்சிகோவின் தெற்குப் பகுதியை யொட்டிய பசிபிக் கடற்கரை ஓரப் பகுதிகள் சுமார் 8 லட்சம் சதுர கிலோ மீட்டர் நிலப்பரப்பு பிளந்து கிடக்கிறது. அந்தப் பகுதியில் இருந்த கட்டிடங்கள் அவ்வளவும் இடிந்து விழுந்து தரைமட்டம் ஆயின.

மெக்சிகோ நகர மையப் பகுதியில் ஆயிரக்கணக்கான சடலங்கள் பனிக்கட்டியில் மறைந்து கிடக்கின்றன.

உறவினர்கள் யாராக இருந்தாலும் அவற்றை அடையாளங் காட்டுமாறு ரேடியோ, டெலிவிஷன் மூலம் செய்திகள் ஒலி பரப்பாகின்றன.

சுமார் 20 ஆயிரம் பேர் மாண்டிருக்கலாம் என்று சொல்லப்பட்டாலும் உயிர் சேதம் லட்சக்கணக்கில் இருக்கலாம் என்றும் ஒரு தகவல் கூறுகிறது.

## சோவியத் உதவி

பாதிப்பு நிலைமைகளை நேரில் கண்டறிய அமெரிக்க ஜனாதிபதி ரீகனின் துணைவியார் நான்சிரீகன் மெக்சிகோவுக்கு விரைந்து செல்கிறார் மெக்சிகோ நகரத்துக்கு தேவைப்படும் அனைத்து உதவிகளையும் செய்ய அமெரிக்காதயாராக இருப்பதாகரீகன் தெரிவித்துள்ளார் நிவாரண வேலைகளுக்காக அமெரிக்கா உடனடியாக ஹெலிகாப்டர்களை அனுப்பியுள்ளது. பல்வேறு நாடுகளும் உதவிக் கரம் நீட்டியுள்ளன. சோவியத் யூனியன் இரண்டரை லட்சம் டன் மருந்துகள் கூடாரங்கள் போர்வைகள் உடைகள் ஆகியவற்றை அனுப்பியுள்ளது

ஜப்பான் நாடு 12½ லட்சம் டாலர் அனுப்பியுள்ளது. அல்ஜீரியா நாடும், போலந்தும் நிதி உதவி செய்ய முன் வந்துள்ளன.

## 5 ஆயிரம் சடலம் மீட்பு

இதுவரை சுமார் 5ஆயிரம் சடலங்கள் இடிபாடுகளுக்கு இடையே மீட்கப் பட்டன.

ஜலிஸ்கோ, குவரேரோ மிச்சோகான் பகுதிகளில் நூற்றுக்கணக்கான மக்கள் உயிரிழந்தனர் என்று கூறப் படுகிறது.

சில கொள்ளை கூட்டத் தினர் பாதிக்கப்பட்ட பகுதிகளில் புகுந்து கையில் கிடைத்தவற்றை சுருட்டுகிறார்கள். இதைத் தடுக்க ராணுவத்தினர் ஆங்காங்கே நிறுத்தப்பட்டுள்ளனர் இடிந்து விழுந்த கட்டடத்திலிருந்து கொள்ளைஅடிக்கும் கூட்டத் தினரை ராணுவம் கைது செய்து வருகிறது.

## சர்வதேச அமைப்புகள்உதவி

சோவியத் ரஷ்யா 50 டன் எடையுள்ள உணவுப் பொருள்களை அனுப்புகிறது. சர்வதேச அடிப்படையிலான கிறிஸ்தவ அமைப்புகள் கனிவான ஆகிய உதவிகள் புரிக்க முன் வந்துள்ளன.

## தமிழக மீனவர்கள் மீது தாக்குதல்: அமைச்சர் எச்சரிக்கை

வேலூர், செப். 24— தமிழக மீனவர்கள்மீது இலங்கை கப்பற்படையினர் தொடர்ந்து தாக்கி வருகிறார்கள். இதை தமிழ் நாடு அரசு சும்மாபார்த்துக் கொண்டிருக்காது என்று மீனளத்துறைஅமைச்சர் கோவேந்தன் கடும் எச்சரிக்கை விடுத்தார்.

இதுவரை தமிழக மீனவர்கள் 6 பேர்களை இலங்கை அரசு சுட்டுக்கொன்றிருக்கிறது என்றும் அவர் குறிப்பிட்டார்.

இலங்கை கடல் எல்லைக்குள் தெரிந்தோ தெரியாமலோ மீன் பிடிக்கச் செல்லும் தமிழக மீனவர்கள் மீது சட்டப்படி நடவடிக்கை எடுப்பதை விட்டு விட்டு இலங்கை கப்பற் படையினர் துப்பாக்கியால் சுட்டுக்கொல்வது கண்டிக்கத்தக்கது என்றும் அவர் கூறினார்.

வடஆற்காடு மாவட்டம் வேலூரில் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்றில் அமைச்சர் காவேந்தன் கலந்து கொண்டு மேற்கண்டவாறு பேசினார்.

# கொட்டும் மழை: செங்கல்பட்டில் ஜெயலலிதா உண்ணாவிரதம் ஆயிரக்கணக்கானோர் பங்கேற்பு

செங்கல்பட்டு, செப். 24- ஈழத் தமிழர்கள் படுகொலை செய்யப்படுவதைக் கண்டித்து கழகக் கொள்கைபரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதா செங்கல்பட்டில் உண்ணா நோன்பு மேற்கொண்டார்,

அவருடன் பல்லாயிரக் கணக்கான தொண்டர்கள் உண்ணாநோன்பு மேற் கொண்டனர்.

செங்கல்பட்டு பஸ் நிலையம் அருகே உண்ணா விரதப் பந்தல் அமைக்கப்பட்டு இருந்தது. உண்ணா விரதப் பந்தலுக்கு ஜெயலலிதா வந்தபோது அவருக்கு பெண்களும் குழந்தைகளும் போட்டிபோட்டுக்கொண்டு மலர்மாலைகள் அளித்தனர்.

உண்ணா நோன்பு நடைபெற்றுக் கொண்டு இருக்கும் போதே காலை 10-50 மணிக்கு மழை கொட்டோ கொட்டு என்று கொட்டத் துவங்கியது என்றாலும் மக்கள் கலைந்து செல்லாமல் கொட்டும் மழையிலும அப்படியே உட்கார்ந்து இருந்தனர்,

மேடையிலும் மழை சொட்டிக் கொண்டிருந்தது ஏறத்தாழ இருபது நிமிடம் பெருமழை பெய்து சாலையெங்கும் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டது.

என்றாலும் உண்ணாவிரதம் தொடர்ந்து நடைபெற்றது,

ஜெயலலிதாவுடன் மாவட்ட கழக அவைத்தலைவர் பாக்கூர் சுப்பிரமணியம் உக்கம்சந்த், காஞ்சி பன்ணீர் செல்வம், உ.ச,வரதன் க. கண்ணசன், இந்திரா காங்கிரஸ் சார்பாக ஜே, ஏ. வகாப் கே. நடராஜ், ஜனதா சார்பாக குப்புசாமிநாயுடு. யாலு சென் சேசவலு டெல்லிபாபு கா.க.தே.கா. சார்பாக சந்திரன் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி சார்பாக முருகதாஸ் மற்றும் கழக முன்னணியினர் ரானமூர்த்தி யூசுப், சபாபதி லட்சுமிமுத்து, ஆண்டாள், புலவர் பத்ரோஸ், அம்பேத்கார் பேரவை சார்பாக கோவிந்தராசன் ஆகியோர் உண்டியலில் பணம் போட்

உண்ணா நோன்பு இருந்தனர்.

உண்ணா நோன்பில் ஏராளமான பெண்கள் கலந்து கொண்டனர் உண்ணா நோன்பு துவங்கிய இரண்டு மணி நேரத்திற்கு பின்னரும் உண்ணா நோன்பு இருக்க மக்கள்சாரைசாரையாக வந்து கொண்டிருந்தனர்,

இலங்கைத்தமிழர் துயர் துடைப்புக்காக திரட்டப்படும் நிதிக்கு முதன் முதலாக ஜெயலலிதா

டார்.

செல்வி ஜெயலலிதாவைப் பார்ப்பதற்கென்றே ராஜரத்தினம்மாள் என்ற மூதாட்டி காஞ்சிபுரத்திலிருந்து வந்து இருந்தார்.

அவர் கூட்ட நெரிசலில் வருவதைக் கண்ட ஜெயலலிதா அந்த மூதாட்டியை அழைத்துவரச்சொன்னார். அந்த மூதாட்டியை மேடையில் தம்முடன் அமரச் செய்து அரை மணி நேரம் உரையாடிக் கொண்டிருந்தார்,

# புரட்சித்தலைவர் முயற்சி வெல்லும்: இலங்கை பணியும்

## செல்வி ஜெயலலிதா பேட்டி

செங்கல்பட்டு, செப் 24- முதல்வர் புரட்சித் தலைவர் எடுத்துள்ள முயற்சி நிச்சயம் வெற்றி பெறும். இலங்கை அரசு பணியப் போவது உறுதி என்று செல்வி ஜெயலலிதா கூறினார்.

செல்வி ஜெயலலிதாவை நிருபர்கள் இன்று பேட்டி கண்டபோது அவர் கூறியதாவது:-

சர்வ கட்சியினரின் முடிவுக்கு ஏற்ப முதல்வர் புரட்சித் தலைவர் அவர்களின் அழைப்பை ஏற்று சர்வ கட்சியினர் மட்டும் உண்ணா நோன்பு இருக்கவில்லை. அரசியல் வேறுபாடுகளுககு அப்பால் தமிழகமே ஈழதமிழர்களுக்குஆதரவாக இமயம் போல் எழுந்து நிற்கிறது. புரட்சித்தலைவரின் அழைப்பினை மொதுமக்கள் அனைவரும் ஏற்று நல்லாதரவு தநதிருக்கின்றனர்

ஈழத்தமிழர் பிரச்சினைக்குத் தீர்வு காண புரட்சித்தலைவர் அவர்கள் எந்தெந்த வழிகளில் எத்தனை எத்தனை முயற்சிகள் எடுத்து வருகிறார் என்பதனை நாடு அறியும் அவர் எடுத்து வரும் முயற்சிகளுக்கு முழு ஆதரவினைத் தெரிவிக்கும் முறையில் தான் தமிழகமே இன்று ஈழத் தமிழருக்கு ஆதரவாக ஸ்தம்பித்து நிற்கிறது.

முன்பெல்லாம் பாராளு மன்றத்தில் ஈழத் தமிழர்களுககு ஆதரவாக தமிழகத்தைச் சேர்ந்த கழக உறுப்பினர்களும் இதர உறுப்பினர்களும்தான் குரல் கொடுப்பாம். ஆனால்இன்றைசகு நிலைமை வேறு.

பாராளுமன்றத்தில் அனைத்து மாநிலத்தவரும் அனைத்துக் கட்சித் தலைவர்களும் ஈழத் தமிழர்களுக்காக இன்றைக்குக் குரல் கொடுக்கிறார்கள். இது புரட்சித்தலைவர் அவர்களுக்குக்கிடைத்த மாபெரும் வெற்றி அல்லவா? அதே போல் ஈழத் தமிழர்களும் வெற்றி பெறுவார்கள் அது வரை புரட்சித் தலைவர் அவர்களின்முயற்சி ஓயாது இலங்கை அரசு அடிபணியும் நாள் வெகுதூரத்தில் இல்லை,

இவ்வாறு செல்வி ஜெயலலிதா கூறினார்,

## உ.பி புதியமுதல்வர்

லக்னோ, செப், 24— என் டி. திவாரி ராஜினாமாவை தொடர்ந்துஉத்தர பிரதேச சட்டசபை காங்கிரஸ் தலைவராக வீர்பகதூர்சிங் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார். இவர் திவாரியை தொடர்ந்து உத்தரபிரதேச முதல்வராகிறார்.

ஆலந்தூரில் கழக நாடாளுமன்ற அணித் தலைவர மோகனரங்கம் தலைமையில் உண்ணா விரதம நடைபெற்றது

# முழு அடைப்பு வெற்றி...

(1ம் பக்க தொடர்ச்சி) அக்கட்சித் தொண்டர்கள் இலங்கைத் தமிழருக்கு ஆதாவு தெரிவித்து இன்று தியாகராய நகர்காமராஜர் நினைவகத்தில் உண்ணா விரதம் இருந்தனர்.

இந்த உண்ணாவிரதத்தில் ரானஸ்ட்பால், ஆம்பல் ராமையா உள்ளிட்ட பலர் பங்கேற்றனர்.

இலங்கை தமிழருக்காக நடைபெறும் உண்ணாவிரதப் போராட்டத்தில் ஏ.ஐ.டி.யு.சி.யை சேர்நத பில்லவ மற்றும் துறைமுக தொழிலாளர்கள் துறைமுக வாயிலில் உண்ணா விரதமிருந்தனா. இந்திய கம்யூனிஸ்ட்டு கட்சி தமிழ் மாநில செயலாளர் ப.மாணிக்கம், சின்னத்தம்பி ராமதாஸ் குருசாமி உள்ளிட்ட பல தொழிற்சங்கத் தலைவர்களும் இந்த உண்ணாவிரதப் போராட்டத்தில் ஈடுபட்டுள்ளனர். அழகிரிசாமி இந்த உண்ணா விரதத்தை துவக்கி வைத்தார்

## எச். எம். எஸ்

எச். எம். எஸ். தொழிலாளர்கள் அந்தோணிப் பிள்ளை தலைமையில் இலங்கைத் தமிழருக்கு ஆதரவு தெரிவித்து இன்று உண்ணா விரதம் இருந்தனர் எச்.எம். எஸ். தொழிற் சங்கத்தை சேர்ந்த ஏராளமான தொண்டர்கள் இந்த உண்ணாவிரதத்தில் ஈடுபட்டனர்.

## கடற்கரை சாலையில

புரட்சித்தலைவரும் காங்கிரஸ் தொண்டர்களும் கடற்கரை சாலையில் இலங்கை தமிழருக்காக உண்ணாவிரதம் இருந்தனர் இந்த உண்ணாவிரதம் காரணமாக காசாவ் வங்கி முதல் சாந்தோம் வரை எங்கு பார்த்தாலும் மக்கள் வெள்ளமாகத்தான் இருந்தது.

சென்னையின் மற்ற பாகங்களிலிருந்தும் ஏராளமான கழகத்தொண்டர்கள் கடற்கரை நோக்கி வந்த வண்ணமிருந்தனர்.

## தீக்குளிப்பு முயற்சி

மதுரை, செப். 24 மதுரை நகரில் கட்டபொம்மன் சிலை அருகே பிரபு என்ற பலைராஜன். வயது 25) இலங்கைத்தமிழருக்காக ஆதரவு தெரிவித்து தன் உடலில் மண்ணெண்ணெய் ஊற்றி தீக்குளிக்க முயன்றார்.

சம்பவம் பற்றி கேள்விப்பட்டதும் போலீசார் விரைந்து சென்று பிரபுவை கைது செய்தனர்.

## காலமானார்

செங்கல்பட்டு, செப். 24 கழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதாவின் டிரைவர் வடிவேலு திடீரென காலமானார்.

செங்கல்பட்டில் உண்ணாவிரதம் இருக்கச் சென்ற செல்வி ஜெயலலிதாவுடன் அவர் சென்றிருந்தார்.

ஜெயலலிதா மேடைக்குச் சென்று உண்ணாவிரதம் துவங்கிய பின்னர்அவர்காரிலேயே படுத்து இருந்தார் அவர் தூங்கிக்கொண்டிருக்கும் போதே உயிர் பிரிந்தது. உடனடியாக அவருடைய சடலம் சென்னைக்கு கொண்டுவரப்பட்டது [illegible] தலைவரின் பிரசார வடிவேலு ஜெயலலிதாவிடம் பல ஆண்டுகள் பணிசெய்தவர்.

# நாவலர் - காளிமுத்து உண்ணா விரதம்

சென்னை, செப். 24— இலங்கைத் தமிழருக்காக தமிழகம்முழுவதும் நடைபெறும் உண்ணாவிரதப் போராட்டத்தில் திண்டுக்கல்லில் நிதியமைச்சர் டாக்டர்நாவலர் பங்கேற்றார்.

நிதியமைச்சர் நாவலருடன், நாடாளுமன்ற உறுப்பினர் கே. ஆர். நடராஜன், சட்டமன்ற உறுப்பினர் பிரேம்குமார், நகர செயலா சீனிவாசன், ஒன்றிய செயலாளர் கோபாலகிருஷ்ணன், சண்முகம். தமிழரசுமுத்துலக்கையன், முஸ்லிம்லீக்லத்திப், கா.கா.தே. காவை சேர்ந்த தோழர்கள், சேலம் நடராசன் உள்ளிட்ட பலர் இந்த உண்ணா விரதத்தில் பங்கேற்றனர்.

நிதியமைச்சர் நாவலர் உண்ணாவிரதம் இருக்கும் இடத்தில் மாவட்ட ஆட்சித் தலைவர்மாதவன்நம்பியார் இலங்கைத்தமிழர் நிவாரண நிதிக்காக உண்டியல் குலுக்கினார். நிதியமைச்சர் நாவலர் மற்றும் ஏராளமானவர்கள் நிதி அளித்தனர். பின்னர் மாவட்ட ஆட்சித்தலைவர் தனது அலுவலகத்தில் இலங்கைத் தமிழருக்கான உண்ணாவிரதத்தில் ஈடுபட்டார்.

## மதுரை

மதுரையில் நேற்று இரவு பலத்தமழை பெய்திருந்தது எனவே ஜான்சிராணி திடலில் தண்ணீர் தேங்கிநின்றது. சேறும் சகதியுமாக திடல் இருநத போதிலும் அந்தப்பகுதியில் அமைச்சர் காளிமுத்துவும் மற்றகழகத் தோழர்களும் இலங்கைத் தமிழர் நலன் பேண உண்ணாவிரத அறப்போர் தொடங்கினர். தார்ப்பாயை விரித்து அமைச்சர் காளிமுத்து உண்ணாவிரதம் இருந்தார்! அவர் கறுப்புச் சட்டை அணிந்து இருந்தார்.

மதுரை எஸ் பாண்டியன், பட்டுராசன், பாலகிருஷ்ணன், நவநீதகிருஷ்ணன் சந்தானம் பாலகுரு, லட்சுமிநாராயணன், தங்கம், முனியசாமி ஜக்கையன், உட்பட பல்லாயிரக்கணக்கான பேர் உண்ணாவிரதம் இருந்தனர்

## புரட்சித்தலைவரை தரிசித்த...

(முதல் பக்கத் தொடர்ச்சி) விரதப் போராட்டம் நடைபெறுகிறது.

இவ்வாறு தலைமைச் செயலாளர் கூறினார்.

முதல்வர் புரட்சித் தலைவர் உண்ணா நோன்பு மேற்கொள்ளும் அண்ணா சதுக்கத்தை நோக்கிமக்கள் வெள்ளம் வந்த வண்ணம் உள்ளது. சுமார் 11,30 மணியளவில் மேடைக்கு இடது பக்கம் மக்கள் வெள்ளம் கரை புரண்டது. கூட்டத்தைக் கட்டுப்படுத்த போலீசார் விரைந்து சென்ற போது மக்களிடையே சற்று நெரிசல் ஏற்பட்டது. இதில் 3 பேர் காயம் அடைந்தனர். அவர்கள் உடனடியாக மருத்துவமனைக்கு அனுப்பி வைக்கப்பட்டனர்.

அண்ணா சதுக்கம் எதிரே உள்ள பல்கலைக்கழக சாம்டவுண்ட் ஆதம்ஸ் சாலை ஆகிய பகுதிகளில் மக்கள் வெள்ளம் நிறைந்து வழிந்தது.

கூட்டத்தை கட்டுப்படுத்துவதில் போலீசார் தீவிரமாக ஈடுபட்டனர்.

இலங்கை தமிழருக்காக தாமபாத்தில் அமைச்சர் ஆர்,எம் வீ. தலைமையில் உண்ணாவிரதம நடைபெற்றது டெல்லி சிறப்பு பிரதிநிதி எட்மண்ட், ஜெகதரட்சகன் எம,பி,, மயிலை தமிழ்மணி எம்,எல்,ஏ,, எல்ல. ராஜமாணிக்கம் எம்.எல்.ஏ. உள்ளிட்ட பலர் பங்கேறறனர்.

# "தெய்வமே! தெய்வமே! தண்ணீராவது அருந்துங்கள்"

சென்னை, செப்.24— சென்னை அண்ணா நினைவகம் அருகே உண்ணாநோன்பு இருந்த புரட்சித்தலைவருக்கு அவருடைய உதவியாளர் மாணிக்கம் பச்சைத் தண்ணீர் குடிக்கக் கொடுத்தார், ஆனால் புரட்சித்தலைவர் தண்ணீர்குடிக்க மறுத்தார்,

சிறிது நேரத்திற்குப் பின்னர் புரட்சித் தலைவரின் குடும்ப டாக்டர் பி ஆர். சுப்பிரமணியம் ஒரு டமளரில் தண்ணீர் கொண்டு வந்தார் அப்போதும் புரட்சித்தலைவர் தண்ணீர் அருந்த மறுத்தார், சிறிது நேரத்திற்குப் பின்னர் மீண்டும் பச்சைத் தண்ணீர் தான் என்றுகூறி பி, ஆர், சுப்பிரமணியம டம்ளரை நீட்டினார். அப்போதும் புரட்சித்தலைவர் முகம் சுளித்தார்

இந்தக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டிருந்த மக்கள் "தெய்வமே! தெய்வமே! தண்ணீராவது அருந்துங்கள்" என்று பலத்த குரல் கொடுத்தனர்.

புரட்சித்தலைவருக்கு எதிரே இருந்த பல்லாயிரம் மக்களும "தெய்வமே! தெய்வமே தண்ணீராவது அருந்துங்கள்" என்று கடலோசை போல் குரல் எழுப்பினா அதன் பின்னர் புரட்சித்தலைவர் ஒரு டம்ளர் பச்சைத் தண்ணீர் அருந்தினார்,

புரட்சித்தலைவரிடம் விஜயகுமாரி பத்தாயிரம் ரூபாய் நிதி அளித்தார், அந்தநோட்டுக்கட்டுகளை பிரித்து ஒவ்வொரு நோட்டாக புரட்சித்தலைவர் உண்டியலில் போட்டார்.

ஈழத்தமிழர் தலைவர் சந்திரஹாசன் இந்திரா காங்கிரஸ் பிரமுகர்களான மணிவர்மா சேதுப்பட்டு பாண்டியன் ஆகியோர் புரட்சித் தலைவருக்கு வாழ்த்துக் கூறி 101 ருரூபாய் வீதம் நிதி தந்தனர்.

# முதல்வர் புரட்சிதலைவர் தலைமையில்... (முதல்பக்கத் தொடர்ச்சி)

தலைவர் மார்க்கபந்து கிறித்துவஜனநாயக முன்னணித்தலைவா பிரான்சிஸ் ராயன் காங்கிரஸ் [எஸ்] கட்சித்தலைவர் அன்பு வேதாசலம்மக்கள் கட்சித்தலைவர் எஸ். எல். கிருஷ்ணமூர்த்தி ஜெகஜீவன்ராம், காங்கிரஸ் தலைவர் ஜெய்னுதீன் ஆகியோர் உணணாநோன்பு மேற் கொண்டனா.

இலங்கையிலிருந்து அகதிகளாக வந்துள்ள தமிழர்களுக்கு நிதிதிரட்டும் முறையில்மாவட்டக் கலெக்டர் உண்டியலுடன் வந்தார்.

அந்த உண்டியலில் புரட்சித்தலைவர் ஆயிரம் ரூபாய் நிதியாகப் போட்டார் புரட்சிதலைவருக்கு கலெக்டர் பாட்ஜ் அணிவித்தார். அந்த பாட்ஜை ஜானகி அம்மையார் சரி செய்து சரியாகப் பொருத்தினார்.

லட்சுமிபதி என்பவரின் பத்து வயதுச் சிறுவன் எத்திராஜ் 105 ரூபாயும் வழக்கறிஞர் நடேசனின் புதல்வ நூறு ரூபாயும் புரட்சிததலைவரிடம் நிதியாக அளித்தனர். அந்தக் குழந்தைகளைத தட்டிக் கொடுத்து புரட்சித்தலைவர் தமது மகிழ்ச்சியைத் தெரிவித்தார்.

மேடைக்கு முன் வரிசையில் கல்யாணி ராமசாமி விஜயகுமாரி வளர்மதி நூர்ஜஹான் ரசாக் ஆண்டாள்ரவுத் உட்பட ஆயிரமாயிரம பெண்கள் அமர்ந்திருந்தனர்.

மேடைக்கு பின் வரிசையில் நாடாளுமன்ற அணித்தலைவர் குழந்தைவேலு பாராளுமன்ற உறுப்பினர்கள் ஆலடி அருணா,வலம்புரி ஜான், மாவட்ட எம். ஜி. ஆர். மன்றச் செயலாளர் மதுசூதனன், சட்டமன்ற உறுப்பினர்கள் சைதை துரைசாமி, பிரான்சிஸ் ராயன், மேலவை உறுப்பினர்கள் இரா.ஜனார்த்தனம், சி கோலபபா லீலாவதி, அங்கமுத்து மற்றும் ஜே பாலன், டி.கே.கபாலி, வேதாசலம், கோவைத் தம்பி, சத்தியா, பத்மநாபன். ஜசரிவேலன். டாக்டர் ரெக்ஸ், தியாகராயநகர் மூர்த்தி, செல்வம், வ. கோதண்டராமன், சிகாமணி, வழக்கறிஞர் ராஜ்குமார், ஆகியோர் அமர்ந்திருந்தனர்.

## அலை அலையாக

காலை எட்டு மணிக்கெல்லாம் உணணா நோன்பு இருக்கும் புரட்சிததலைவருக்கு வாழ்த்துக்கூற மக்கள் அலை அலையாக வரத் தொடஙகினர்.

நீண்டு விரிந்து பரந்த மாபெரும் கடற்கரைச் சாலை ஒரே மக்கள் கடலாகக் காட்சி அளித்தது. புன்முறுவல் பூததும கையை உயர்த்தி அசைத்தும் மக்கள் தந்த உளப்பூர்வமான வரவேற்பை புரட்சித் தலைவர் ஏற்றுக்கொணடார,

மக்கள் வெள்ளம் ஒரே உணர்ச்சிப் பெருக்காகக் காட்சி அளித்தது

சாலைகளில் எல்லாம் மக்கள் உணணாவிரதம தொடங்கினர். புரட்சித தலைவர் அவர்களோடு லட்சோப லட்சம் மக்கள் உண்ணாவிரதம் மேற் கொண்டனர்.

## எம் ஜி ஆர் பக்தர்கள்

பல்லவன் தொழிலாளர்கள் சீருடையுடன் உண்ணாவிரதத்தில் பங்கு கொண்டனர். ஒவ்வொரு பகுதியினரும் தங்கள் தங்கள் பதாகைகளுடன் சாரை சாரையாக அலை அலையாக வந்து கொண்டேயிருந்தனர்.

எம்.ஜி.ஆர். பக்தர்கள் என்றஒரு பதாகையுடன் பொது மக்கள் வந்தனர். இதனைப் பார்தது புரட்சித்தலைவர் புன்முறுவல் பூத்தார். அவாகளும் உண்ணா நோன்பில் கலந்து கொண்டனர்.

பேரறிஞர் அண்ணா அவர்களின் பேச்சு முழங்கிக் கொண்டே இருந்தது.

## சிறுவன் தந்த பரிசு

புரட்சித் தலைவர் உண்ணா நோன்பு மேற்கொண்ட பந்தலுக்குள் நுழைய ஒரு சிறுவன் பலமுறை முயன்றான். அவனைக் காவல்துறையினர் தடுத்தனர், இதனைப் புரட்சித் தலைவர் பார்த்துவிட்டார்

அந்தச் சிறுவனை அழைத்து வரும்படி கூறினார் அவன் ஒரு துணிபையோடுவந்தான, பையிலிருந்த கைத்தறித் துண்டுகளை எடுத்து புரட்சித் தலைவருக்கும் ஜானகி அம்மையாருககும் அளித்தான. அடுத்து பொதுச் செயலாளர்இராகவானந்தத்திற்கும், அமைசசா பண்ருட்டியாருக்கும் அளித்தான. அந்த சிறுவனுக்குப் புரட்சித் தலைவா வாழ்த்துக் கூறினார்.